# திருமலையில்

## தி. தி. தேவஸ்தான

# காட்டேஜ் கட்டண விவரங்கள்

| எண் காடடேஜ் விவரம | கடடணம் (நாள் ஒன்றிற்கு) |
|---|---|
| டி. பி. சி. | ரூ.25/- ரூ.15/- ரூ.10/- |
| டி. பி. சி. 3வது வரிசை (ஹீட்டர் இல்லாதது) | ரூ. 10/- |
| ஹில் வ்யூ டீலக்ஸ காட்டேஜ் | ரூ. 20/- |
| ஹில் வ்யூ விருந்தினர் விடுதி | |
| பெரியன | ரூ. 40/- |
| சிறியன | ரூ. 20/- |
| ஹில் வ்யூ காட்டேஜ் | ரூ. 10/- |
| சங்கு மிட்டா காட்டேஜ் | ரூ. 20/- |
| சேஷாத்ரி நகர் காட்டேஜ் | ரூ. 20/- |
| அஞ்சனாத்ரி காட்டேஜ் | ரூ. 20/- |
| கருடாத்ரி நகர் காட்டேஜ் | ரூ. 20/- |
| திருமணக் கூடம் (3வது சத்திரம்) | ரூ. 15/- |
| சிறப்பமைப்புகொண்ட காட்டேஜுகள் | ரூ. 75/- |
| டி. சி. சி. (உள்ளே உள்ள காட்டேஜுகள்) | ரூ. 50/- |

**எஸ். வி. விருந்தினர் விடுதி,**

| | |
|---|---|
| பெரிய அறைத்தொகுதிகள் | ரூ. 50/- |
| மூலே அறைத்தொகுதிகள் | ரூ. 40/- |
| சிறிய அறைத்தொகுதிகள் | ரூ. 35/- |
| எச். ஆர். ஜி. காட்டேஜுகள் | ரூ. 150/- |
| மோடிபவன் | ரூ. 100/- |

**திருமணக்கூடங்கள் (காட்டேஜுகள்)**

| | |
|---|---|
| பாலாஜி காட்டேஜ் | ரூ. 500/- |
| ரூயா காட்டேஜ் எண்: 248 | ரூ. 80/- |
| கோகினேனி காட்டேஜ் எண்: 226 | ரூ. 80/- |
| சி. சி. காட்டேஜ் எண்; 237 | ரூ. 100/- |
| எஸ். எம். சி. கிழக்கு எண் : 272 | ரூ. 50/- |
| ஏ. டி. சி. எண் : 99 | ரூ. 80/- |
| டி. பி. (உள் பகக காட்டேஜ்) | ரூ. 50/- |
| டி. பி. வி. வி. சி. | ரூ. 50/- |
| டி. பி. காட்டேஜ (தனிச் சிறப்புக் கொண்டது) | ரூ. 75/- |
| ஏ. டி. சி. மற்றும் டி. பி. சி. ஒரு அறைத் தொகுதி ஹீட்டர் உள்ளது | ரூ. 15/- |
| ஹீட்டர் இல்லாதது | ரூ. 10/- |

(ஏறத்தாழ இதே மாதிரியானதொரு நிகழ்ச்சி, கூசிபூடி 'பாமா கலாபம்' இயற்றிய சித்தேந்திர யோகியின் வாழ்விலும் நடைபெற்றதாகக் கூறப் படுகிறது. சித்தேந்திர யோகி நாரா யண தீர்த்தரின் சீடராக இருந்த தாகக் கருதப்படுவது ஒரு வேளை இதற்குக் காரணமாயிருககக் கூடும்.)

நாராயண தீர்த்தரின் காலம பதி னேழாவது நூறருண்டின் பிற்பகுதி யாக இருககக்கூடும் எனப்படுகிறது: ஏறக்குறைய எண்பது ஆண்டுகள் அவா வாழ்ந்ததாகச் சொல்லப் படு கிறது. பதினாறுவது நூற்றாண்டின இறுதிப்பகுதியில் பிறந்து, ஏறத் தாழ முப்பததைந்தாவது வயதில தெற்கு நோக்கிச் சென்று, காவேரி தீரபபகுதியில் முதிர்ந்த வயதில் சித் தியடைந்தாா அவர் என்று கருதப் படுகிறது.

நாராயண தீர்த்தர் துறவியான பின, சோபனாத்திரி, வேதாத்ரி, ஸ்ரீகாகுளம், பூரிஜகன்னாதம் முதலிய தலங்களுக்குச் சென்று, ஆஙகாங்கே எழுந்தருளியிருக்கும தெய்வங்களின மீது சம்ஸகிருதத்தில் கீர்த்தனைகளை இயற்றினார்.

நாராயணதீர்த்தர் காசி வரை சென்றதாக அறியககிடக்கிறது. அவ ருக்கு ராமானந்த தீர்த்தர் என்பவர் சந்நியாச ஆசரமத்தில் குருவாக இருநததாகச் சொல்லப்படுகிறது. இவருக்கு ராம கோவிந்த தீர்த்தர் என்றும் ஒரு பெயர் உண்டு. நாரா யணதீர்த்தர் தாம் இயற்றிய 'சாண் டில்ய பக்தி சூத்திர வியாக்யான'த் தில் 'ஸ்ரீராம கோவிந்த ஸ்ரீதீர்த்த க்ருபா விசேஷாதுபலப்யபோதம், ஸ்ரீவாஸுதேவா ததிகத்ய ஸர்வ சாஸ்த்ராணி வக்தும் கிமபி ஸப்ரு ஹானஹ' என்று குறிப்பிடுகிறார். இநத ராமகோவிந்ததீர்த்தர் 'ஸ்ரீகிருஷ்ண லீலா தரங்கிணி' நூலில் சிவராமானநத தீர்த்தர் என்னும பெயருடன் குறிப்பிடப்படுபவர் என்றும; துறவு மேறகொள்ளுமுன் மாணவராயிருநத போது வாசுதேவ

சாஸதிரி என்பவரிடம் நாராயண தீர்த்தர் சாஸ்திரஙகளைக் கற்றுக் கொண்டார் என்றும் கூறப்படுகிறது. சிவராமானநத தீாத்தரே நாராயண தீர்த்தருக்கு கிருஷ்ணமந்திரத்தைத் உபதேசம் செய்தவா ஆவார்.

நாராயணதீர்த்தர் தெற்குநோக்கி யாத்திரை மேற்கொண்டு, ஸ்ரீவேங்க டேசவரர் உறையும் திருமலைககு வநதார். அவர் அங்கே தங்கியிருந்த போதுதான், காஞ்சி காமகோடி பீடாதிபதிகளான ஸ்ரீ போதேந்திர சரஸவதி சஙகராச்சாரிய சுவாமிகள் அவரிடமிருந்து நாம சங்கீர்த்தனத் தின் மகிமையை அறிந்துகொண்ட தாகச் சொல்லப்படுகிறது. தஞ்சைப் பகுதியில் பஜனை சம்பிர தாயத்தை மக்களிடையே பரப்பிய தில் ஸ்ரீ போதேநதிர சுவாமிகளுக்கு முக்கியப் பஙகுணடு எனபதை இன றும பஜனைப பாடல்களிடையே காணப்படும் குருவநதனைக் கீாத்த னங்களிலிருநது நாம் தெரிநது கொள்ளலாம். ('யஸய ஸ்மரண மாத்ரேண நாம பகதிஹப்ராஜயதே தம் நமாமி யதி ச்ரேஷ்டம போதேந் த்ரம ஜகதாம குரும்'. 'போதேந்த்ர குரும் பஜேஹம் போதேநத்ரவரம'— கானடா ராகம், சாபு தாளம)

நாராயணதீர்த்தர் தமிழநாட் டிற்கு வந்ததறகு ஒரு சுவையான கதை உண்டு.

சூலை நோயினுல் பெரிதும் துன புறறு வருநதிக கொணடிருநதாா நாராயணதீர்நதா. அப்போது ஒரு நாள் அசரீரியாக 'உனமுன ஒரு வெண்வராகம் தோனறும அதைப பினபறறிச செலலவும, உனது வயிற்று வலி குணமாகும' என்று ஒரு குரல் அவருககுக கேடடது. அஙஙனமே அவாமுன வெளளைக் காட்டுப் பன்றி ஒனறு தோன்றி, ஓடத் தொடஙகியது. அவரும் அதைப் பினபற்றிச் சென்று கொணடேயிருந்தாா. அந்தப பன்றி இறுதியில தஞ்சை மாவட்டம் குட முருட்டி ஆற்றின் தென்கரையி லுளள வரகூா அல்லது பூபதிராஜ புரம் எனனும் ஊரை அடைந்து, அங்கு உளள வேங்கடேச்வரா ஆல யத்தினுள மறைந்தது. நாராயண தீர்த்தரும் கோயிலினுள் அதைப் பின்பற்றிநுழைந்தார். அவர் வயிற்று வலி மறைநது போயிற்று. அநத வெண்வராகமும் மறைநது போயிற்று. அவவூரில் நெடுங்காலம் தங்கியிருநது பஜனை சம்பிரதாயத் தைப பிரபலமடையச்செய்தார் நாரா யண தீாத்தா. மேலும், வரகூரில் அங்கிருநத வேஙகடேசப் பெருமாள் கோவிலைப் புதுப்பித்துப் புதிதாக ஆலயப் பிரதிஷ்டையும செய்ததாகச் சொல்லப்படுகிறது. இப்போதும அவ வூரில் நடைபெறறு வரும் 'உறியடி' உற்சவததிறகு அவரே வித்திட்டவ ராக இருககககூடும். தவிரவும், அவா, காவிரிபபகுதிகளான திருக்காட்டுப் பள்ளி, ரங்காதபுரம், திருமழபாடி, திருவையாறு போன்ற இடங்களில் கிருஷ்ணன் வழிபாட்டினை மக்களி டையே பஜனை முறையில் பரவச் செய்ய முயறசி செயதாா எனச் சொல்வதறகான தடயங்களுள்ஒன்று ரங்கநாதபுரத்திறகு அருகிலுளள வயலிலிருநது கணடெடுககபபெற்ற அழகிய நாததனகிருஷ்ணரின் சிலை யாகும. இபபோது இச்சிலை ரங்க நாதபுரத்திலுள்ள பெருமாள் கோவி லில் இருககிறது. இசசிலையின் அடிப் பகுதியில சந்நியாசி ஒருவரின் சிறு படிமம இருககினறது: அது நாரா யணதீாததராக இருககலாம் எனறு எணணுவதறகு இடம் உண்டு.

பாலகிருஷணனிடம நாராயண தீாததா கொணடிருந்த ஆழநத ஈடுபாடடை விளககும் இரணடு நிகழச்சிகள மனததை நெகிழச செய்பவை

'பாமா கலாபம்' இயற்றிய கூச்சி பூடியைச் சேர்ந்த சித்தேந்திரயோகி நாராயணதீர்த்தரின் சிஷ்யராகச் சிறிது காலம் இருந்ததாகத் தெரிய வருகிறது. நாராயணதீர்த்தர் 'கிருஷ்ணலீலா தரங்கிணி'யை இயற் றிக் கொணடிருநத காலம் அது. 'பால கோபால தரஙகம' எழுதிக்கொண்டு வநதாா. இடையிடையே அவர் அலுப்பினுல படுத்துக்கொண்டிருக் குமபோது, அப்பாட்டில் ஒவ்வொரு சரணத்தின இறுதியிலும் தாம் அமைத்திருந்த ஜதிகளைச் சொல்லிப் பாாப்பது வழக்கம். அவா அம்மாதிரி ஒரு சமயம பாடிக் கொணடிருந்த போது பாலகிருஷணன் அவருடைய வயிறறின்மீது லயத்திற்கேற்பஆடிக் கொண்டிருநததை அவருடைய சிஷ்ய ரான சித்தப்பன காண நோந்தது. குருவினிடம் 'உங்கள வயிற்றின்மீது பாலகிருஷணன ஆடுகிறுனே, உங்க ளுககு வலி எதுவும தோன்றவில்லை யா?' என்று கேட்டாா சீடர்.

தமது கணகளுக்குப் பாலகிருஷ் ணன புலப்படாமல போனதுகுறித்து வருநதிய அவா சித்தப்பனிடம் "அடுததமுறை அவா உனக்குத் தென்படும போது, 'எனக்கு மோட் சம் எப்போது? என குருவிற்கு மோட்சம் எப்போது?' என்று கேள்" எனக கூறினுர். பாலகிருஷ் ணன சிததப்பனிடம் 'நீ நாட்டியம், சஙகீதம் முதலியவறறில் வல்லவனுகி பாரிஜாதாபஹரணம் கதையை யக்ஷ கானமாக இயறறி, கூச்சிபூடியிலுள் ளவர்களைககொணடு அதை ஆடிக் காண்பிதத பிறகு, இநதப் பிறவியி லேயே மோடசம பெறுவாய். ஆனுல உனது குருவிறகு இன்னெருரு ஜனமத் திலதான் விடுதலை' எனறு கூறினு ராம். கதை கறபனையாக இருகக லாம ஆனுல், நாராயணதீர்ததரும் சிததேநதிரயோகியும சமகாலத்தவர் கள எனறு இதிலிருநது தெரிகிறது.

மறறெருரு சமயம, நாராயணதீர்த் தர் காசியில வசிததுவநதபோது, அவர் அறையினுள் கிருஷண பரமாத் மாவைக குறிதது, தம்மை மறந்து பாடிககொணடிருக்கையில், மூடிய அவவறையிலிருநது சலங்கை ஒலி வருவதைக கவனித்த சிலர், அவர் பெணகளோடு ஆடல், பாடல்களில்

ஈடுபடுகிறா என்று அவதூறு கூறவும துணிந்தனா. மேலும், அவருக்கு பிடசையிடவும் மறுத்தனர். ஆயி னும், அவர் தமது அறையினுள்ளே யே இருந்து வந்தார். பலநாள் அவர் வெளியே வராமல அவ்வாறு உள் ளேயே இருந்து வந்தது அவர்களுக்கு வியப்பூட்டியது. ஒருநாள கதவிலி ருநத சிறிய துவாரம வழியாகப பார்த்தபோது, மாது ஒருததி நாரா யணதீர்த்தருககு அனனம ஊட்டிக கொண்டிருந்ததைக் கண்டனர். அம மாதின தெயவிக ஒளி அவாகளின் கண்களைக் கூசச்செயதது. கிருஷ்ண பரமாத்மாவினிடம் அவருககிருநத மாபெரும் ஈடுபாட்டிஃயும் அவருக குத தெய்வமே உதவியருளுவதையும நேரிலேயே கண்டு கொண்ட அவா கள் அவா தாள்களில் விழுநது வணஙகி அறியாமையினுல் தாங்கள் செயத தவற்றை மன்னிதது அருளு மாறு வேணடினா

ஒரே வாக்கியததில் சகுண, நிர்க் குண உபாசனை முறையினை எடுத்து ரைக்கும சகதி ஸ்ரீ வித்யாசங்கரருக் குப் பிறகு நாராயணதீர்த்தருக்கே தெரிந்திருநதது எனறும், மதுசூதன சரஸ்வதி மற்றும் வாசஸபதி மிச ரர் ஆகியவர்களையும் விட உயாந்த அறிவுத் திறமுள்ளவர் அவா எனறும், காசியில் இருந்த பண்டிதாகள அவா இயற்றிய நூல களைப் படிததபின் கருத்துரை வழங் கியதாகச் சொல்லப்படுகிறது.

நாராயணதீாத்தர் சிறநததோர் அதவைத வேதாந்தி. அவர் 'சாங்க்ய காரிகை வியாக்யானம்' 'சாங்க்ய தததுவ கௌமுதி வியாக்யானம' 'சித்தாந்த பிந்து', 'லகு சந்த்ரிகை' 'விவரண தீபிகை' முதலிய வேதாந் தம் பற்றிய நூல்களையும் 'ஸ்ரீகிருஷ்ண லீலா தரங்கிணி', 'பாரிஜாதாபஹர ணமு' என்னும் இசை நாட்டிய நாடகங்களையும் 'சாண்டில்ய பகதி சூதர வியாக்யானம' 'ஹரிபகதி ஸுதாாணவம்' ஆகிய பக்தி நூல் களும இவர் எழுதியவையே.

'ஸ்ரீ கிருஷ்ணலீலா தரங்கிணி' சம்ஸ்கிருததில் இயற்றப்பட்ட தோர இசை நாட்டிய நாடகம ஆகும். இதை அவர் எங்கு இயறறி ஞா என்பது பற்றிக் கருத்து வேறு பாடுகள் உண்டு. சிலா, நாராயண தீர்த்தர் கூச்சிப்பூடியில் தங்கியிருநத போது அவ்வூரில் இருந்தவர்களுககு கானம், நிருத்யம் ஆகியவற்றில்

(29-ம் பக்கம் பார்கக)

# பொய் மெய்யாகுமா?




உலகம் மெய் பேசுபவர்களையே மெச்சிப் பேசுகிறது. பொய் பேசுபவர்களை வெறுத்து ஒதுக்குகிறது. மெய் வெல்ல வேண்டும் என்பதே அனைவரது விருப்பமாக இருந்து வருகிறது.

மெய் பேசுதல் என்றால் என்ன? உள்ளதை உள்ளபடியே கூறுவதே மெய் பேசுதல் எனப்படும். அதாவது காணாததைக் கூறுதலும் கேளாததைக் கூறுதலும் பொய் பேசுதல் எனப்படும்.

மெய் பேசுபவர்கள் தடுமாற வேண்டியதில்லை. ஆனால், பொய் பேசுபவர்கள் தடுமாற்றம் அடைகின்றனர். பொய் பேசுபவர்கள் ஒரு பொய்யை மறைக்க மற்றொரு பொய்யைச் சொல்லி மேலும் மேலும் இடர்ப்படுவர். எனவே மெய் பேசுதல் எளிது.

என்றாலும், பெரும்பாலோர் பொய்யே பேசுகின்றனர், ஏன்? பொய் பேசுவதால் தாம் செய்த தவறிலிருந்து தப்பித்துக் கொள்ளலாம் என்பதே! எனவே தவறு செய்பவர்களே பொய் பேசுகின்றனர். நல்லதே செய்பவர்கள் பொய் பேசத் தேவையில்லை.

மெய் பேசுவதால் நன்மையும் ஏற்படும். சில சமயம் தீமையும் ஏற்படும். அதுபோலவே பொய் பேசுவதால் தீமையும் ஏற்படும். சில சமயம் நன்மையும் ஏற்படும்.

சான்றோர்கள் எப்போதும் மெய்யே பேசுவர். தங்களுக்குத் தீமையே வருவதாயினும் பொய் பேசார். மெய் பேசுவதால் சில சமயம் தீமையும் ஏற்படுவதுண்டு. அப்போது என்ன செய்வது? பொய் பேசித் தானே ஆக வேண்டும்.

பொய் பேசுவது தவறில்லையா? தவறில்லையாம்! அது எப்படி? சான்றோர்கள் கூறும் பொய்யால் குற்றமற்ற நன்மை பிறருக்கு உண்டாகுமானால், அப்போது பொய் பேசலாம் என்கிறார் வள்ளுவர். அவ்வாறு பேசப்படும் பொய் மெய்யாகவே கருதப்படுமாம்! ஏனெனில், அப்பொய்யினால் யாருக்கும் கெடுதல் ஏற்படுதல் இல்லையல்லவா?

குற்றமற்ற நன்மையைத் தரும்போது பேசப்படும் பொய்தான் மெய்யாகக் கருதப்படுகிறது. இதுதான் பொய் மெய்யாகும் விந்தை! இந்த விந்தையை உலகுக்கு உணர்த்தியவர் வள்ளுவப் பெருந்தகை. அவர் வாய்மொழியைக் கேளுங்கள்.

பொய்ம்மையும் வாய்மை யிடத்த
புரைதீர்ந்த
நன்மை பயக்கும் எனின்.

இக்குறட்பாவுக்குச் சான்று ஒன்று காண்போம்.

1948 ஆம் ஆண்டு இந்தியா உரிமை பெற்று விளங்கும் காலம் அது. அப்போது வழக்கம் போல நாடு முழுவதும் நலம் பெற வேண்டும் என்று மகாத்மா காந்தியடிகள் ஓடியாடித் தொண்டு புரிந்து கொண்டிருந்தார். எல்லாச் சமயத்தவரும் எல்லா மொழியினரும் எல்லா நிறத்தவரும் வேற்றுமை பாராட்டாமல் ஒற்றுமையாக வாழ வேண்டும் என்பதற்காகப் பாடுபட்டுக் கொண்டிருந்தார். அப்போது அவர் செவிகளில் நடுக்கம் தரும் செய்தி ஒன்று வந்து விழுந்தது. அது என்ன தெரியுமா?

வட இந்தியாவில் உள்ள நவகாளி என்னுமிடத்தில் வகுப்புக் கலவரம் நடைபெறுகிறது என்பதுதான் அந்தச் செய்தி!

நவகாளியில் வாழ்ந்து வந்த இந்துக்களும் முகம்மதியர்களும் ஒருவரை யொருவர் அடித்துக் கொண்டினர் பெண்களையும் குழந்தைகளையும்கூடக் கொல்லத் தொடங்கினர். அவர்கள் செய்த கொடுமைக்கு அளவேயில்லாமல் போய்விட்டது. இந்தக் கொடுமையைக் கேட்டுக் காந்தியடிகள் துடிதுடித்துப் போனார்.

---

மாருதிதாசன்

---

நவகாளி நோக்கி காந்தியடிகளின் பாதங்கள் நடந்தன. தனியொருவராகவே சென்று அமைதியை நிலை நாட்டப் புறப்பட்டார் காந்தியடிகள்! அப்போது அவர் மேற்கொண்ட பயணமே நவகாளி யாத்திரை எனச் சரித்திரத்தில் சிறப்பாகக் குறிக்கப் பட்டுள்ளது.

அக்காலத்தில் நவகாளியில் நடைபெற்ற நிகழ்ச்சி ஒன்று பொய் மெய்யாகும் விந்தைக்குச்சான்றாகத் திகழ்கிறது அது பற்றி ஒரு சிறிது அறிந்து கொள்வோம்.

நவகாளியில் வாழ்ந்து வந்த இந்துககளும் முகம்மதியர்களும் ஒருவரையொருவர் அடித்துக் கொண்டனர் என்பதை முன்பே குறிப்பிட்டோம் அல்லவா! அவ்வாறு நடைபெறும் போது ஒரு சமயம் இந்து ஒருவர் முகம்மதியர் மத்தியில் தனியாக அகப்பட்டுக் கொண்டார். அந்த இந்துவைக் கண்ட முகம்மதியர்கள் அவரைக் கொல்வதற்காகத்

துரத்திச் சென்றனர். அவர்கள் கையில் கத்தியும், கம்பும் இருநதன. உயிருககுப் பயந்த அநத இநது தப்பித்துக் கொள்வதற்காக ஓடத் தொடங்கினுர். முகம்மதியாகள் அவரைக்கொலவதறகாகத துரத்திச் சென்றனர்;

அந்த இந்துவோ அவர்கள் கையில அகப்பட்டுக் கொள்ளாதிருக்க மிக வேகமாக ஓடத் தொடங்கினுர். தப்பித்துக் கொள்ளலாம் என்பதறகாக அந்த இந்து யாா வீட்டிலாவது நுழைந்து விடலாம என்று பார்த்தார். ஆனுல், அநதத் தெருவில் உளள வீடுகள் அனைத்தும் முகம்மதியர் வீடுகளே என்பதை அவர் அறிந்து கொண்டார். எனன செய்வார் அவர்! பாவம்!

ஓடினுர்! ஓடினுர்! ஓடிக்கொணடேயிருந்தார்! அவரைத துரத்திக் கொண்டு வந்த முகம்மதியர் அவரை நெருங்கி விட்டனர். எனவே செய்வதறியாது திகைத்த இந்து அருகில் இருந்த வீடு ஒன்றினுள நுழைந்து விட்டார். அநத வீடும முகம்மதியர் ஒருவருடையதே!

அந்த வீட்டினுள வயதான மூதாட்டி ஒருவர் வாழ்நது கொண்டிருந்தாா. வேறு யாரும் அநத வீட்டில் இருக்கவில்லை. ஓடி நுழைநத அந்த இநது முகம்மதிய மூதாட்டியின் கால்களில் வீழ்நதாா. தன்னை எப்படியாவது காப்பாற்றுமாறு வேண்டிக் கொண்டாா.

என்றுலும் அநத இநது நடுங்கிப போனுர். முகம்மதிய மூதாட்டி தன்னைக் காப்பாற்றுவாரா? காட்டிக் கொடுத்து விடுவாரா? என்று நடு நடுஙகிப போனுர். அப்போது அநத மூதாட்டி எனன செயதாா தெரியுமா? அந்த இநதுவை உளளே அழைத்துச் சென்ருர். பரணமீது ஏற்றினுர். பாய் ஒன்றில் படுக்க வைத்துச் சுருட்டினுர். பாதுகாப்பாக அங்கே அவரை மறைதது விட்டார். ஒன்றும் தெரியாதவர் போல அந்த மூதாட்டி வெளியே வந்து நின்று கொண்டார்.



தங்கக்கோபுரம்-பழனி திரு. எஸ். கருணுகரன்-சிதம்பரம்:

தன்னை வந்து அடைந்தவர் யாராக இருப்பினும் அவரைக் காப்பாற்றுவதே கடமை எனபதை எல்லாச் சமயச சான்ருேர்களும் கடைப் பிடிப்பர் எனபது உண்மை போலும்!

துரத்திக கொண்டு வந்த முகம்மதியர் அந்த மூதாட்டியின வீட்டை அடைநதனர். அந்த இநது அநதப் பாட்டியின வீட்டில்தான் நுழைந்திருக்க வேணடும என்று ஐயங் கொண்டனா. எனவே அந்தப் பாட்டியிடம விசாரிததனா

தன் வீட்டினுள் யாருமே நுழையவிலலை யெனறு அநத மூதாட்டி உறுதியாகச சொலலிவிட்டாா. என்றுலும் வந்தவாகள திரும்பிப் போக விரும்பவிலலை. அநதப் பாட்டியைக் கேளாமலே அநத வீட்டினுள நுழைநதனர். எல்லா இடஙகளிலும் தேடிப் பார்த்தனர். எங்கும் காணவில்லை. எனவே பரண்மேல் இருந்த பாய்ச் சுருளைத் தங்கள் கத்தியால் குத்திப் பார்த்தனர்.

பாயில் சுருட்டப்பட்டிருந்த அந்த இந்துவின நெஞ்சு பகீர் என்றது. வநதவர்கள் கீழிருந்த வண்ணமாகவே அந்தப் பரணைத் திருப்பித் திருப்பித் தங்கள் கத்தியாலும் கைத்தடியாலும் குத்திக் குத்திப் பார்த்தனர். அது தலையணையோடு சுருட்டி வைககப்பட்டிருக்கும் படுக்கை யெனறு கருதி அவ்விடத்தை விட்டு நகர்நதனர். பின்னர் தோட்டம், கிணறு முதலிய எல்லா இடஙகளையும் தேடிப் பார்த்தனர். ஆள கிடைககாமையால் சோர்வுடன அநதப் பாட்டியிடம் வநது மீண்டும் விசாரிககத் தொடங்கினர்.

ஒடி வந்தவன் அந்த வீட்டில்தான் நுழைநதிருக்க வேண்டும் என்றும், அநதக கிழவிதான் அவனைப் பாது

காப்பாக மறைத்து வைத்திருக்க வேண்டும் என்றும் அவர்கள் உறுதி யாக நம்பினர். எனவே அவர்கள் அந்தப் பாட்டியிடம் மீண்டும் துருவித் துருவிக் கேட்டனர். ஆனல் பாட்டியோ கடைசி வரை தன் வீட்டினுள் யாருமே நுழையவில்லே யென்று உறுதியாகக் கூறி நின்ருர். என்ருலும் அவர்களுக்கு நம்பிக்கை ஏற்படவில்லே.

அந்த மூதாட்டி முகம்மதிய சமயத்தில் உறுதியான நம்பிக்கை கொண்டவர். தங்கள் குலத்தெய்வமான அல்லாமீதும், வேதமான குர்ஆன்மீதும் குறைவில்லாத நம்பிக்கையும் பக்தியும் கொண்டவர். எனவே வந்தவர்களுக்கு யோசனே ஒன்று தோன்றியது. அந்தப் பாட்டி ஒருவேளே இப்போது பொய் சொனனுலும் அல்லாமீதும் குர்ஆன மீதும் ஆணையிட்டுக் கேட்டால் மெய்யே பேசுவார் என நம்பினர். அப்போது உண்மை தானே வெளிவருமல்லவா!

வந்தவர்களில் ஒருவன் கேட்டான். "பாட்டி! சத்தியமாகச் சொல். நீ வணங்கும் அல்லாமீது ஆணையாகச் சொல். யாரும் உன் வீட்டினுள் நுழைந்தது கிடையாதா?"

"நான் வணங்கும் அல்லாமீது ஆணையாகக் கூறுகிறேன். என் வீட்டினுள் யாருமே நுழைந்ததுவுமில்லே. நான் யாரையும் மறைத்து வைத்திருக்கவுமில்லே. இது சத்தியம்" என்று பாட்டி சத்தியம் செய்து கூறினள்.

இருந்தாலும் வந்தவர் சந்தேகம் நீங்கிய பாடில்லே. தங்களின் வேதமான குர்ஆன்மீது சத்தியம் செய்து சொல்லிவிட்டால் தாங்கள் நம்பிச் சென்று விடுவதாகக் கூறினர்.

முகம்மதியர்கட்குத் தங்கள் தெய்வமான அல்லாமீதும் திருமறையான குர்ஆன்மீதும் உறுதியான நம்பிக்கை உண்டு. எனவேதான வநதவர்கள் இந்த வழியைக கடைப்பிடித்தனா

குர்ஆனமீது சத்தியம செய்து உண்மையைச் சொலவதா? சரண் அடைந்தவனைக் காப்பாற்றுவதா? என்ற இக்கட்டான நிலே. பாட்டி உறுதியாகவே கூறினள்.

"நான் நாள்தோறும் ஓதிவரும் தெய்வத் திருக்குர்ஆன்மீது ஆணையிட்டுச் சொல்கிறேன். சத்தியமாகச் என் வீட்டினுள் யாருமே நுழைய வில்லே!" என்று அழுததந்திருத்தமாகக் கூறிவிட்டார் அந்தப் பாட்டி!

திரும்பத் திரும்பக் கேட்டாலும், எத்தனே சத்தியம் செய்யச் சொன்னுலும பாட்டியின் பதில் ஒரே விதமாகவே இருந்தது. எனவே வந்தவாகள் ஏமாறறத்துடன் திரும்பி விட்டனா.

அந்த மூதாட்டி கூறியது பொய் தானே! என்ருலும் அந்தப் பொய்யினுல் எவ்வளவு பெரிய நன்மை ஏற்பட்டது!

பாட்டி கூறியதோ ஒரே ஒரு பொய். அதனுல் ஏற்பட்டதோ பல நனமைகள். அனுதையாகப் பயந்து ஓடி வநத இநதுவின் உயிர் காப்பாற்றப்பட்டது. தனனேச சரண் புகுநதவர்களேத் தாஙகுதல வேண்டும் என்ற தர்மம கடைப் பிடிககப் பட்டது. அனுதையைக் கொன்ருர்கள் என்ற பாவம் வந்து சூழாமல் அந்த முகம்மதியர்களும் தவறு செய்வதிலிருந்தும தப்பித்துக் கொண்டனர்.



மெய் கூறியிருநதால் என்ன ஆகியிருக்கும்? அநியாயமாய் ஒரு உயிர் கொல்லப் பட்டிருக்கும். தன்னே வந்து தஞ்சம் புகுந்தவனேக் காட்டிக் கொடுத்த பாவம் பாட்டியைச் சூழ்ந்திருக்கும. கொலே செயத பாவத்திற்கு அந்த முகம்மதியா ஆளாகியிருப்பர்.

இததனே கொடுமைகளேயும் நேராமல் தடுததது எது? ஒரு பொய் தானே! அநதப் பொய்யால் விளேந்தது எனன? யாருககும தீங்கு நேராத நன்மைகள் தானே! இப்படிப்பட்ட நேரத்தில் மட்டும் பொய் சொல்லலாம் அல்லவா? இநதப் பொய்யைத் தான் "புரை தீர்ந்த நனமை பயக்கும் பொய்-வாய்மையின் பாற்படும் பொய்" என்று வள்ளுவர் வகுத்துரைக்கிருர்.

★



பாண்டவ தூதர் கோயில்-காஞ்சிபுரம்.

# கோயில் வளர்ந்த கதை

டாக்டர். ஏ. வி. ஜெயசந்திரன்,
சென்னை.

**ஆலயத்திற்கு நீக்கத்தக்க பூமி :**

மண்டை ஓடு, பாறை, புழுக்கள், புற்றுக்கள், எலும்புகள், பொந்துகள், சிறிய மணல்கள் கொண்டனவும், கெரிமரங்களின் வேரகள, முற செடிகள் உடையனவும், சேறுடன் கூடிய பாழும் கிணறுகள், உடைந்த கட்டை மிகுந்தனவும், சாம்பல், கரி மிகுந்த பூமியும் விலக்கத்தக்கன.

தயிர், நெய், தேன், எண்ணெய், உதிரம், சவம், மீன், பறவை முதலிய மணம் மிகுந்த பூமி விலக்கத்தக்கன.

தோற்றத்தில் வட்டம், முக்கோணம், வஜ்ராயுதம், மீன், பல்லி, குரங்கு, பன்றி, காட்டுப் பாம்பு, உளி, முறம், உரல், சங்கு, முனை, பூனை, ஒணுன் போன்றத் தோற்றமுடைய பூமியெல்லாம் விலக்கத் தக்கவை.

ஆகமங்கள், தேர்நதெடுக்கவும் விலக்கவும் வேண்டிய பூமிகளுக்குத் தெளிவாக விளக்கங்கள் தருகின்றன. எடுத்துக்காட்டாக, காமிக ஆகமம் பூமியினை 12 ஆகத் தொகை செய்கிறது. காசியப ஞான காண்டமென்ற வைகாநச (வைணவ) ஆகம நூல் 9 ஆக விளக்குகிறது.

இவற்றின் ஒப்புவமையினைச் சற்றுக் காண்போம் :



**காமிகம்**

1. சைவம்.
2. பிரம்மம்.
3. வைஷ்ணவம்.
4. ஐந்திரம்.
5. ஔக்ஷம் (பசு)
6. பௌதிகம்.
7. ஆசுரம்.
8. பைசாசம்.
9. ராக்ஷசம்.
10. வாய்வம்.
11. வாருணம்.
12. ஆக்நேயம்.

**காசியபம்**

1. வைஷ்ணவம்.
2. பிரம்மம்.
3. ரௌத்ரம.
4. ஐந்திரம்.
5. காருடம்.
6. பௌதிகம்.
7. ஆசுரம்.
8. பைசாசம்
9. ராக்ஷசம்.

மேற்கண்ட அட்டவணையில், காமிகத்தில் ஔக்ஷம் (பசு) என்றது, காசியபத்தில் காருடமாக மாறியிருப்பது தவிர, பெரும்பாலும் முதல் ஒன்பதும் இரண்டு பகுதிகளிலும் ஒததிருககின்றன. வாய்வம், வாருணம, ஆக்னேயம் இவை மூன்றும் காமிகத்தில் மேலுஞ் சேர்ந்திருககின்றன.

சைவாகமத்தில் முதல்வகைப் பூமியும் பெயாகளில் மட்டுமே வித்தியாசப்படுகின்றன.

**சைவ பூமி :**

சைவ பூமியும் வைஷ்ணவ பூமியும் தரத்தில் ஒன்றே. அவை ஐந்து

மரங்கள் உடையன. கோங்கு, மருதை, விளா, அரசு, ஆச்சா முதலியன. நிலத்தாமரை, துளசி, அருகு, விஷ்ணுக்கிரந்தி, ஆகுகர்ணி முதலாம் தாவரங்களும் உண்டு. பறவைகளில் புறுக்கள், கிளிகள், அன்னங்கள் உரியனவாய்ப் பேசப்படுகின்றன. தாமரை, சந்தன மணம். வெண்மையும் சிவப்பும் நிறைந்த நிறத்து பூமி.

**பிரம்ம பூமி :**

இது வில்வம், முருக்கம் முதலிய மரங்களால் நிறைந்திருக்கும். நாணல் முதலாம் ஹோமத்திற்குத் தேவையான தாவரங்களாலும், இனிய மணம் பரப்பும் செடிகொடிகளாலும் சூழப் பெற்றிருக்கும். மான்கள் உலவும். அன்னம் முதலாம் தெய்விகப் பறவைகள் நிறைந்திருக்கும். உருகிய வெண்ணெயின் மணமும், ஹோமாக்னியில் சொரியப் பெற்றப் பலிப பொருட்களின் வாசனையும் வீசிக கொண்டிருக்கும். வெண்ணிற வண்ணமும் இனிய சுவையும் உடைய பூமி. அருள் மணம் கமழும் சூழல்.

**வைஷ்ணவம் அல்லது ரௌத்ர பூமி :**

இவ்விரண்டு பூமியும் ஒன்றே. உமபை, புளி, புங்கம், மூங்கில், செம்பருத்தி, எருக்கு, பருத்தி முதலாம் தாவரஙகள் உடையன. செம்மை படர்ந்த கருநிறப் பூமி. அமிலச் சுவை உடையது. உல்லாசமும் மகிழ்ச்சியும் நிறைந்த பூமி. இதில் வசிப்பவர்களுக்குப் பௌரஷமும் பலமும் தருவது.

**இந்திர பூமி :**

மூன்றுவதானது இந்திர பூமி. வாழை, பலா, மா, புங்கம், மகிழம், பாதிரி, வெண்ணொச்சி, கருநெய்தல் நிறைந்த நிலம். வைசியர்களும், சூத்திரர்கள், பிணியாளரும் வசிப்பது. பாதிரி மணத்தது. மங்கிய பசுமை படர்ந்த பூமி. உழவர்க்கும், கால்நடைகளுக்கும் களிப்பூட்டும் பூமி.

**ஔசஷ அல்லது காருட பூமி :**

காமிகத்தில் சொல்லப்பட்ட ஔசஷ பூமியும், காஸ்யபத்தில் சொல்லப்பட்ட காருட பூமியும் ஒன்றேயாம். பாதிரி, அழிஞ்சில் முதலாம் மரங்கள் சூழ்ந்தது. நறுமணம் ததும்பும் தாவரங்களை உடையது பூளை, கிரி, முயல், உடும்பு, குள்ள நரிகளும், சகோரம் முதலிய பறவைகளும் காணப்படும்.

பசு மஞசள் நிறத்தது.

இதில் வசிப்பது பௌரஷத்தையும் பலத்தையும் அளிக்கும்.

**பௌதிக பூமி :**

பெருநொச்சில், குருக்கத்தி, அருகு, மருகு, அலரி, அழிஞ்சில், மல்லிகை, இலுப்பை நிறைந்தது. மணம் வீசும் மலர்களின்றும், நறுமணப் பொடிகளானதுமான வாசனை நிறைந்த காற்றுல் நிறைந்த பூமி. உணவுற்பத்தியும், புஷ்டியும் தரவல்லது.

**ஆசுர பூமி :**

சேராமரமும் வெங்காயமும் வளர்வது. துர்க்கந்தம் வீசும் வனவிலங்குகள் வசிப்பது. வல்லூறுகளும் விஷப் பாம்புகளும் வாழ்வது.

**ராக்ஷஸ பூமி :**

சண்டாளர்களும் திருடர்களும் நிறைந்த பூமி. பெரும் பிணிகளாலும் ஆக்ரமிக்கப்பட்டது. கெட்ட மணம பரப்பும் நச்சுத் தாவரங்கள் வளர்வது.

**பைசாச பூமி :**

நறுவிலி மரங்களும் இலவ மரங்களும் அடர்நதது. தான்றியும் வளர்ந்தது. நாய்களும் குறுநரிகளும் வசிப்பது. உப்புச் சுவை உடையது. இது, கண்ணுக்குக் களிப்பூட்டும் காட்சி உடைய பூமி அல்ல.

**வாய்வ பூமி :**

காமிகத்தில் மட்டும் காட்டப் பெறும் பூமி இது. நரிகளும் சுவர்க்கோழிகளும சப்திப்பது.

**வாருண பூமி**

பாக்கு மரங்கள் பரவியது. யோகிகளுககு அனைத்துச் சித்திகளும் அளிக்க வல்லது.

**ஆக்நேய பூமி :**

சதுரக்கள்ளியும், நறுவிலையும் செறிந்தது. சுணணும்பு நிறைந்தது. நீர் அரியது. இங்கு வாழ்வது அழிவைத் தரும்.

(தொடரும்)

 

# விளையும் பயிர்



மாதர்களாக பிறப்பதற்கே மா தவம் செய்ய வேண்டும் என்று பெரி யோர்கள் கூறுகின்றார்கள். மேலும் 'வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும் தெய்வத்துள் வைக்கப் படும்', என்று கூறி பின் 'வாழ் வாங்கு வாழ' உதவுபவள் மனைவியே என்றும் கூறுகிறார் தெய்வப் புலவர் வள்ளுவர். வாழ்க்கை என்னும் கட லில் ஓயாது வரும் பிரச்சனைகளாகிய அலைகளை கடந்து குடும்பம் என்னும் கப்பல் நன்கு கரையேற உதவுவதும் குடும்பத் தலைவியே. வானத்து விண் மீனாகக் குடும்ப குல விளக்குகள் ஒவ் வொன்றும் ஒளிர ஒவ்வொரு அன்னை யும் படும்பாடு எழுத்திலடங்காது. விளையும் பயிரை கண் காணித்தல் போல வளரும் குழந்தைகளை ஒவ் வொரு தாயும் போற்றிப்பாதுகாத்து வளர்த்தல் மிகமிக அவசியம். நல்ல பண்புகள் 'பசுமரத்தாணி' போல் வளர தக்கசமயம் இளமைக் காலமே. 'ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளை யாது' என்பது பழமொழி.

எழுத்துக்கள் கற்க முதலாவதாக 'அ' என்ற எழுத்தினை அறிதல் அவ சியம், அதேபோல் முதலாக குழந் தைகள் மனதில், எல்லாவற்றிக்கும் மூல காரணமாகத் திகழும் இறை வனிடம் பக்தி தோனறும்படி செய்ய வேண்டும். பகதி எங்கு உள்ளதோ அங்கு எல்லா நற்பண்புகளும் தானா கவே வரும். இதறகு நலல எடுத்துக் காட்டாக தாயும் தநதையும் திகழ வேண்டும். அமுதூட்டும் அன்னை தான் முதன்முதலில் குழந்தைக்கு ஆசானாகின்றாள். அதனை மனதில் கொண்டே மாணிகக வாசகனாரும், இறைவனை, 'அம்மையே அப்பா ஒப் பிலா மணியே' என்று கூறுகின்றார். ஆகவே தாயனவள் தினமும் காலை யும் மாலையும் விளக்கேற்றி இறை வன்முன் சிறுசிறு ஸ்லோகங்களை குழந்தைகளுக்குக் கற்பித்தல் அவ சியம். தாயனவள் தினமும் தவறாது செய்தால் குழந்தைகளிடம் இறை யன்பு பாய்ந்து வரும் வெள்ளமெனப் பெருகும் என்பதில் ஐயமில்லை.

'நீரில்லா நெற்றிபாழ்' என்பதால் அவரவர் நியமப்படி நெற்றியில் விபூதி, சந்தனம், திருமண் இவற்றால் நெற்றிக்குறி இட்டுக் கொள்ளச் செய்தல் அவசியம். காலை, மாலை, இரவு படுக்குமுன் இதனைச் செய்தல் மிகமிகச் சிறந்தது. வாரத்தில் ஒரு நாளாவது கோவிலுக்கு அழைத்துச் சென்று அங்குள்ள தெய்வங்களை முறைப்படி வணங்கச் செய்ய வேண் டும்; நம் இந்துமத கோட்பாடுகளை நன்கு மனதில் பதியும்படி செய்தல் வேண்டும்.

*திருமதி. சுகந்தால்-பெங்களூர்.*

சிறு வயதிலிருந்தே குழந்தைகளைக் காலத்தின் மாண்பினை உணரச்செய்ய வேண்டும். உலகில் எதனை வேண்டு மானாலும் திரும்பப் பெறலாம். ஆனால் கடந்த காலம், திரும்பி வராது; காலம் அறிந்து, செயல் பட்டால் உலகையே கூட வெல்ல லாம். இதனையே வள்ளுவர் 'ஞாலம் கருதினுங் கைகூடும் காலம், கருதி இடத்தாற் செயின்' என்று கூறியுள் ளார். இளமையிலேயே குழந்தை கள் தம் எல்லாக் காரியங்களையும் தக்க நேரத்தில் செய்தல் வேண்டும். தினமும் தவறாது குறித்த நேரத்தில் பள்ளிக்கு செல்லுதல், கொடுக்கப் பட்ட வீட்டுப் பாடங்களை வீட்டில் செய்து முடித்து, அன்று நடத்திய புதிய பாடங்களையும் சரிவர தவறா மல் படிக்கும் பழக்கமே அவர்களின எதிர்காலம் நன்கு அமைய அஸ்தி வாரமாக அமைகிறது. குழந்தை கள் படிக்கும் வகுப்பிற்கும், பாட நிலைகளுக்கும் ஏற்ப குறித்த கால அளவு படிக்கச் செய்வது தாயின் தலை யாய கடமையாகிறது.

ஆண்டு முழுவதும் நடத்தும் பாடங்களைச் சரிவர படித்தாலே இறுதித் தேர்வில் சிறந்த மதிப்பெண் கள பெற்று முதன்மையாக தேர்ச்சி பெற முடியும். ஆகவே இதனை மன தில் கொண்டு ஒவ்வொரு தாயும் குழந்தைகள் அவ்வப்போது கொண்டு வரும் மதிப்பெண்களை நோக்கி, பின் தங்கியுள்ள பாடங்கள் யாவை, என்ன காரணம் என்று அறிந்து பள்ளியுடன் தொடர்பு கொண்டு, அதனைச் சரி செய்தல் வேண்டும். இது ஒவ்வொரு பெற்றோரும் தம் குழந் தைக்கு செய்ய வேண்டிய மிகமிக முக்கியமான பெரிய உதவியாகும்; சுடாவிளககாயினும தூண்டு கோல் ஒன்று வேண்டுமல்லவா?

பள்ளியில் பயிலும்போதுதான் மாணவர்களாகிய வைரங்கள் பட் டைத் தீட்டப்படுகின்றன. பள்ளி வாழ்க்கையில்தான் ஒவ்வொருவரும், பலரோடு கூடி வாழுதல், பகிர்ந்து அளித்தல், பலருக்குத் தலைவனாக் திகழுதல், போன்ற பல பண்புகளை அறிய வாய்ப்பைப் பெறுகின்றனர். இத்தகு ஆறறல்கள வளர பள்ளி களில் எத்தனையோ நிகழ்ச்சிகள் நடததப்படுகினறன. தம் குழந்தை கள் நலனில் அக்கறையுள்ள ஒவ் வொரு தாயும் தக்க சமயத்தில் பளளி ஆசிரியர்களுடன் தொடர்பு கொண்டு, குழந்தைகளின் அறிவாற் றல் பெருக இத்தகு நிகழ்ச்சிகளில் பங்கு பெறச் செய்ய வேண்டும்.

'அறையில் ஆடி அம்பலத்தில் ஆடு' என்பர். ஆகவே வீட்டில் தன் உடன் பிறந்தவர்களுடன் அன்புடன் பழக வழக்கப்படுத்த வேண்டும். ஒரு வருடன் ஒருவர் அன்புடன் வாழ கற்றுக் கொண்டால் சிறு வயதி லிருந்தே மனதில் 'தன்னலப் பேய்' தலைவிரித்து ஆடாது. அன்பினைப் பற்றி கூறவந்த செந்நாப் போதரும் 'அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு' எனக் கூறுகிறார்.

எவ்வளவு தூரம் நடைமுறை வாழ்க்கைக்கு அன்பு அடிகோலு கிறது! வீட்டில் தோன்றும் இந்த பாச உணர்ச்சியே பின்பு பெரியவர் களான பிறகு 'தன்னைப் போல் பிறரை நேசிக்க' பயன்படுகிறது. மனதில் ஈகைத் தன்மையை வளர்க்கின்றது. வீட்டில் 'என்னு டையது' என்ற எண்ணம் நீங்கி 'நம் முடையது' என்று பாதுகாக்கும்மனப் பான்மையை வளர்க்கிறது. இது பின் பாரதியார் பகன்றபடி 'காக்கை குருவி எங்கள் ஜாதி' என்ற பரந்த மனப்பான்மையையும், 'தனியொரு வனுக்கு உணவு இல்லையெனில் ஜகத் தினை அழித்திடுவோம்' என்ற எண் ணத்தையும் நாட்டுப் பற்றையும் மனதில் ஆழப் பதியச் செய்கின்றது. இதனால் சிறுவயதிலிருந்தே குழந்தை கள் ஜாதி மத பேதமின்றி வளர முடியும். ஸ்ரீ சங்கராச்சாரியார் கூறியபடி இந்திய மதமாகிய இந்து மதம் வளர வேண்டுமானால் இத்தகு கொள்கைகள் இளமையிலேயே மக் களிடம் இறை பக்தியுடன் புகட்டப் பட வேண்டும்.

குழந்தைகள் உணவு உண்ணும் போது தினமும் நமக்கு உணவினை அளித்த அன்னலட்சுமியை மனதில் நினைத்து நன்றி கூறி உண்ணச் செய்ய வேண்டும். உணவை வீணாக்காமல், உண்ணும் போது கோபதாபம் இன்றி நன்கு மென்றுத் தின்னச் செய்ய வேண்டும். எப்போதும் எங்கேனும் உண்ணுவது என்பது போல் இன்றிக் குறித்த காலத்தில் அனைவருடன் சேர்ந்து உண்ணவும், ஏழை எளிய வர்க்கு அளித்தும உண்ணும் பழக் கம் தேவை. 'செவிக்குணவு இல் லாத போது சிறிது வயிற்றிற்கும் ஈயப்படும்' என்பதை நன்கு வலி யுறுத்தி இரத்தத்தில் பதியச் செய்ய வேண்டும்.

வீட்டில் வளரும் சமயம் குழந்தை கள் தன்னால் இயன்ற வரை தன் வேலைகளைத்தானே செய்து கொண்டு தன் தாய்க்கு உதவும் மனப்பான்மை யுடன் வளரச் செய்ய வேண்டும். வீட்டில் வேலை செய்தால் தன் நிலைக்கு தாழ்வு என்ற எண்ணம வளரச் செய்யலாகாது. இதற்காக ஒவ்வொரு அன்னையும் குழந்தைகளை அவரவர் வயதிற்கேற்ப, தன் துணி களை தானே எடுத்து வைத்துக் கொள்ளுதல், புஸ்தகங்களை என்றும் ஒழுங்காக உரிய இடத்தில் வைத் தல், பள்ளிக்கு எடுத்துச் செல்லும பை, காலணிகள், பென்சில், ரப்பர், பேனா போன்ற பிறவற்றையும பழுது படாவண்ணம் அவ்வப்போது பார்த்துக் கொள்ளுதல், மேலும் தம் வீட்டில் உள்ள எல்லாப் பொருள களும் அவ்வவற்றிக்கு உரிய இடங் களில் அழகாக, கலைஉணர்வு மிளிரும் படி வைத்தல் அவசியம் என்பதை நன்கு கற்பித்தல் வேண்டும். சுத்தம், ஒழுஙகு, அழகு இவை தம்மைச்சுற்றி லும் இருந்தால் மனமும் நல்லதாக அமையும். எந்த ஒரு செயலிலும் கடமை உணர்ச்சி தோன்றச் செய்ய வேண்டும்.

நாம் என்றும் வாழ்வில் நல்லபடி வாழ வேண்டும் எனில் நம் முன்னோர் கள் வாழ்ந்தபடியே, பெரியோர்கள் சொற்படி, வேத சாஸ்திரங்களில் கூறியபடி வாழ வேண்டும். வேதங களையும், உபநிடதங்களையும் அனை வரும படிக்க இயலாது. ஆனால் எலலாம் கற்றறிநத பெரியவர்கள் இறைவனால் நமககாக எல்லா இடங் களிலும் தன்னலமறற சேவை செய்து வருகிறார்கள. அததகு பெரியவர் களை, பெற்றவாகள் அவ்வப்போது தன் குடும்பத்துடன் தரிசித்து நல் லாசி பெற்று குழந்தைகளின் வாழ்க கைப் பாதை நல்ல மலாப்பாதை யாக அமைய உதவ வேண்டும. இதனையே வள்ளுவரும் 'பண்புடை யாாப் பட்டுண்டு உலகம் அது இன றேல் மண்புககு மாய்வதுமன்' என் கின்றார். ஒவ்வொரு அன்னையும் தினமும் ஒவவொரு நாளும் நல்ல நாளாக அமைய இறைவனை நன்கு பிரார்த்தித்து, குழநதைகளின வேலை களை திட்டமிட்டு செயல படச செய்து, தனனால் இயன்ற போது நல்ல கதைகள், எடுததுக காட்டுகள் மூலம், உண்மை, அனபு, போன்ற பிற நல்ல பண்புகளை மககள் மனதில பதியச் செய்வதன் மூலம் இநதுமத தாமப்படி விளையும் பயிர் முளையிலேயே நனகு வளர உரமிட லாம.

## அறிவிப்பு

திருமலையில் கல்யாணோற்சவம் போன்ற ஆர்ஜித சேவைகளுக் காக பக்தர்களால் எம்.ஓ. மூலம் அனுபபப்படும் தொகையை தி. தி. தேவஸ்தானம் ஏற்றுக் கொண்டாலும், அம்முறை சில நிருவாக சிக்கல் களையும், கால தாமதத்தையும் ஏற்படுத்துவதால், பக்தர்கள், அனுப்ப வேண்டிய தொகையை டி. டி. (D. D) மூலம் அனுப்பினால் மேலாண் மைக்கு அம்முறை உதவியாக அமையும். மேலும் ஆந்திரா வங்கி மற்றும் சில வங்கிகள் இது போன்று தி. தி. தேவஸ்தானததின் பெய ரில் வழங்கப்படும் டி.டி.களுக்கு எவ்விதக் கட்டணமும் பெற்றுக் கொள்வதில்லை.

(20-ம் பக்கத் தொடர்ச்சி)

பயிற்சி அளித்தார் என்றும், அக காலத்தில்தான் அவர் இதை இயற றினர் என்றும் கூறுகின்றனர். ஆனல் வேறு சிலர், அவர் வரகூருக்கு வநத போது அங்கு அதற்குமுன்பாகவே ஆந்திரப்பகுதியிலிருந்து வந்து குடி யேறியிருந்த பாகவதர்கள் அவரை இசை நாடகம் ஒன்றை இயற்றியரு ளும்படிகேட்டுக்கொண்டதற்கிணஙக இதைச் செய்து கொடுததாகவும் சொலலுகின்றனா. மறறும சிலரோ, அச்யுத சமுத்திரம் எனப்படும் மெலட்டூரில குடியேறிய தெலுங்கு பாகவதர்களுக்காக இயற்றப்பட்டது அது என்று கருத்துத் தெரிவிக்கின்ற னா. எவ்வாறு ஆயினும், மெலட் டூர் பாகவதர்கள் தஞ்சை அரசா களுக்கு முன் நிகழ்த்திக் காட்டிய முதல் யட்சகானம் 'ஸ்ரீ கிருஷ்ண லீலாதரங்கிணி' ஆகும் என்பது தெரியவந்துள்ளது.

'ஸ்ரீ கிருஷ்ணலீலா தரங்கிணி' நூலின் கதைப்பொருள் பாக வதம் பத்தாவது பகுதியில் காணப்படும் கிருஷ்ணன பிறப்பு முதல ருக்மிணி கல்யாணம் வரையுள்ள நிகழ்சசிகள் ஆகும். நூலின் முதல் தரங்கத்தில் கதைப் பொருளைக கூறுமிடத்து, "இத்யே வம் ஸங்கரஹேணுக்தா கருஷண லீலா தரங்கிணீ, ஸங்க்ர ஹேணபி நீயதே" என்பதை நோக்குமபோது, அபிநயித்துக காட்டப்படுவதற்காக எழுதப்பட் டது இந்நூல் என்பது தெளிவாகும். ஆடியும் பாடியும் பகவானுடைய கலயாண குணங்களை எடுத்துச் சொல்லி மகிழ்நதும, பிறரையும் மகிழ்விககச் செய்தும் பிறவியின பயனை அடையமுடியும் என்பதற்கு எடுத்துக்காட்டாக அமைந்திருபபது இந்நூல். சாதாரண மக்களின உய் விறகாகவே நாராயணதீத்தர் இதைச் செய்திருக்கவேணடும் என ஊகிப்பது தவறாகாது.

சுலோகஙகள அல்லது செய்யுள் கள், உரைநடைப் பகுதிகள அல்லது கத்யங்கள், ராகத்துடனும் தாளத் துடனும் அமைந்த இசைப்பாடல் கள் அலலது கீர்த்தனைகள் ஆகியவற் றால் ஆகியது 'ஸ்ரீ கிருஷ்ண லீலா தரஙகிணி'. கிருஷ்ணனின் லீலைகள் அல்லது விளையாட்டுக்கள் எனனும் அலைகளினால் (தரங்கங்களினல்) ஆகி யது எனபது இதன் பொருள் ஆகும்.

சுமார் நூறறு ஐம்பததாறு கீர்த் தனைகள் இதில் உள்ளன. இவற்றுள் பல பஜனைககாரர்களினலும் பாடகா களினலும் மக்களிடையே பிரபல மாகியுள்ளன. ஒரு சில: 'ஏஹி முதம் தேஹி' (யதுகுலகாமபோதி-ஆதி), 'க்ருஷ்ணம் கலயஸகி ஸுந்த ரம்' (முகாரி-ஆதி) 'க்ஷேமம் குரு ஸததம' (ஸஹானா அல்லது மோஹனம - ஆதி), 'பூரய மம கோபாலம் (பிலஹரி-ஆதி), 'ஜய ஜய கோகுல பால' (பைரவி அல்லது குரஞ்சி-ஆதி), 'பாலகோபால மாமுத்தர' (மோஹனம் அல்லது ரேகுப்தி-அட), 'சரணம் பவ கருணை மயிகுரு தீனதயாளோ' (சௌ ராஷ்ட்ரம்-ஆதி), 'ஸ்ரீ நிலயம் ஸகி ஸ்ரீநிலயம் திமஹி கோபிகா மானஸ நிலயம்' (வராளி அல்லது முகாரி-ஆதி) ஆகியவை. பல்லவி, அநுபல் லவி, சரணங்கள் ஆகிய வற்றுடன் அவை அமைந்துள்ளன. நாட்டியத்திற்கேற்ற வகையில் சர ணங்களின் இறுதியில் ஜதிக்கோர் வைகள் இணைககப் பெற்றிருத்தல் தனிசசிறப்பு. இக்கீர்த்தனைகள் முப் பதது ஆறு ராகங்களில் இசைக்கப் பட்டுள்ளன. மஙகள கைசி என்னும் அபூர்வராகம, ஆஹிரி, மஞ்சரி, த்வி ஜாவந்தி, கர்ணடக ஸாரங்கா, கௌரீ போன்ற ராகங்கள முதலிய வற்றினையும இவற்றுள் காணலாம்.

கிருஷ்ணன வெறும் அவதார மூர்த்தியே யன்றி அவரே மூலவிராட் அல்லது பரம்பொருள் என்னும் கருத்தினை இழைத்து, பக்தி ரஸத் தைப் பிரதானமாக வைத்துச் செய் யப்பட்டிருக்கும் இந்த இசை நாட் டிய நாடகததில் உயர்ந்த வேதாந்தக் கருத்துகள் விரவியுள்ளன. அன்ன மாசாரயரைப் போலவே நாராயண தீர்த்தரும் சம்வாத 'தருவு'களை அலலது உரையாடலாக அமைந்த

## திருப்பதியில் தங்கு வசதி காட்டேஜுகளின் கட்டண விவரங்கள் (நாள் ஒன்றிற்கு)

**ஸ்ரீவேங்கடேஸ்வரா தர்ம சத்திரம் :**

| | |
|---|---|
| இரண்டு படுககைகளைக் கொண்டு மேசை நாற்காலி வசதிகளைக் கொண்ட அறை: | ரூ. 20-00 |
| நான்கு படுக்கைககளைக் கொண்டு மேசை நாற்காலி வசதிகளைக் கொணட அறை: | ரூ. 25-00 |
| ஒரு படுக்கையும, மேசை நாற்காலி வசதிகளைக கொண்ட அறை | ரூ. 15-00 |

**ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி :**

| | |
|---|---|
| இரண்டு படுக்கைகளையும, குளிர்ச்சாதனம, மேசைநாறகாலி வசதிகளைக் கொண்ட அறை. | ரூ. 50-00 |
| ஒரு படுக்கையும குளிர்ச்சாதனம் மற்றும் மேசை நாற்காலி வசதிகளைக் கொண்ட அறை: | ரூ. 30-00 |

**ஸ்ரீ வேங்கடேஸ்வரா விருந்தினர் விடுதி :**

| | |
|---|---|
| இரண்டு படுக்கைகளைக் கொண்டு மேசை நாற்காலி வசதிகளைக் கொண்ட அறை: | ரூ. 20-00 |

பாடல்களை இதில் அமைத்திருக்கின்றார். எடுத்துக்காட்டாக, கோபீ வஸ்த்ராபஹாரம் என்னும் ஐந்தாவது தரங்கத்தில, கிருஷ்ணன் "ஆவரணம் மம ந ஹி தே தாதும், பாவய கோப வதூ ஜன ப்ருந்த' என்றும் கோபிகள் 'தேவ யதாவரணம் மம நீதம், தேஹி விபோ பவதா ததனந்தம்' என்றும் தொடங்கும் உரையாடல்(தன்யாஸிராகம்-அடதாளம்). வஸ்த்ரம் என்னும் ஆவரணம் என்பது மாயையுடன் கூடிய அகங்காரம் அல்லது தான் எனனும செருக்கு. அதை நீக்கி கோபிகளாகிய ஜீவர்களுக்கு அத்வைத சித்தியைக் கிருஷ்ணன் வழங்கிய முறையினையே நாராயண தீர்த்தா 'ஸ்ரீ கிருஷ்ணலீலா தரங்கிணி'யில் விளக்கிக் கூறுகின்றார்.

நாராயண தீர்த்தரின் 'பாரிஜாதாபஹரணமு' எனனும், தெலுங்கில் இயற்றப் பெற்ற யக்ஷகானம் 'ஸ்ரீ கிருஷ்ணலீலா தரங்கிணி' யைப் போல அவ்வளவு பிரபலமடையவில்லை இதையும் அவர் நாடகமாகவே கருதினார் என்பது 'பாரிஜாதாபஹரணுக்ய நாடகம் அபிநீயதே' என்னும் அவர சொற்களிலிருந்து தெரிகிறது. 'பாரிஜாதாபஹரணமு' இசை நாட்டிய நாடகத்தின் கதைப பொருள் கிருஷ்ணன் ருக்மணிக்கு பாரிஜாத மலரைக்கொடுத்ததை நாரதர் சத்யபாமாவிடம் சொல்வது முதல், சத்தியபாமையின் கோபம், ருக்மிணி சத்தியபாமை சம்வாதம், கிருஷ்ணனிடம் சத்தியபாமையின் ஊடல், கிருஷ்ணன் அவள் ஊடலைத் தணித்தல், கருடன் மீதேறி வானில் செல்லுதல், சத்தியபாமையுடன் சேர்ந்து நரகாசுரனை சம்ஹரித்தல், நந்தனவனம் செலலுதல, பாரிஜாதாபஹரணம், இநதிரனைத் துதித்தல், சத்தியபாமை அரண்மனையின் புழக்கடையில் பாரிஜாதச் செடியை ஊன்றுதல் முதலிய கட்டங்கள வரையில் ஆனது. சித்தேந்திர யோகியின் 'பாமா கலாப'த்திறகும ('பாமா கலாபம்' நாட்டிய நாடகத்திறகு 'பாரிஜாதாபஹரணம்' என்னும் பெயரும் உண்டு). நாராயண தீர்த்தரின் 'பாரிஜாதாபஹரணம' நாடகத்திற்கும் சிறுசிறு வேறுபாடுகள தென்படுகின்றன. நாராயண தீர்த்தரின் 'பாரிஜாதாபஹரணமு' நாடகத்தில் சத்தியபாமையின் பிரிவாற்றாமை நிலையை விளக்கும் ஒரு பாடல்:

> எந்ததுடுகுவாடு கோபாலுடமம
> தாளிவலபுலகெ வசமாயெனம்ம
> தலசுகொண்டேனே தாளலேனமம
> நாராயணதீர்த்த நாமதேயுடம்மா
> ஹரிஹரிஹரிஆ நந்தகோபகுமாருடு
> அலிகிதேநந்நாத ரிஞ்சுவாரெவரு
> என்னதானிகுண ரத்னகருடனி
> வினனவிந்துரே வேதாந்தமுலோ
> சின்னவாடுதீர நாராயணதீர்த்த
> சித்தவிருததிரங்க நடனவிநோதி.

இதில் நாராயணதீர்த்தரின் பெயர் வருவதைக் காணலாம். நாராயண தீர்த்தா தமது 'பாரிஜாதாபஹரணமு' தெலுங்கு இசை நாடகததை மெலட்டூர் அல்லது அச்யுத சமுத்திரம் எனனும் ஊரிலுள்ள வரதராஜ சுவாமிககு அர்ப்பணம செய்திருக்கிறார் எனபதை அதன் மங்கள கீர்த்தனத்திலிருந்து அறிய முடிகிறது. 'சரணம சரணம் முனீந்த்ர ஸன்னுத, சரணம் கமலாநாயக: சரணம் அச்யுதபுரநிவாஸ, ஸ்வாமி வரதராஜ ப்ரபோ'.

நாராயணதீர்த்தா திருப்பூநதுருததியில சித்தியடைநதார் எனறு சொலலப்படுகிறது. நாராயணதீர்த்தா, சதாசிவ பிரமமேந்திரா போனற அத்வைத ஞானிகள, 'வேதாந்த அறிவினல் மட்டுமே பிரம்ம ஞானத்தை அலலது இறை நிலையை அடைய முடியும் எனபது இல்லை, நாதோபாசனையினுலும பரமபொருளை அறிந்து கொள்ளமுடியும்' என்பதறகுச சிறநத எடுத்துககாட்டுகளாக விளஙகுகிறாகள.

> " யதங்க்ரி பங்கேருஹரேணுலக்னம
> நியீய நீரம் விமலாந் தரங்கஹ,
> ஜாஞமி தத்வம நிஜமாத்ம ரூபம
> தம நௌமி நாராயணதீர்தத
> மார்யம "



நாமக்கல் ஸ்ரீ நரசிம்மர்-திருமதி கமலா மாரியப்பன்.

# வைணவ வினா - விடை

வித்வான ஸ்ரீ. உ. வே. தஞ்சை என். எஸ். தாதாசார்யர்.

பற்றினைததையும, தான் தனது என்ற அகஙகாரம், மமகாரத்தையும் அறுத்து, எலலா ஜீவராசிகளிடம் தாயன்பு கொணடிருத்தல் நிர்வாணமம என்பர். இந்தப் பூத உடல் மறைந்தால் அதைப் ''பரிநிர்வாணம்'' என்பா. புத்தாகளுக்கு ''புத்தர்'' ''நல்லோர்களின் சங்கம்'' ''தர்மம்'' என்ற மூன்றும அடைக்கலம. அதனால்தான் புத்தம் சரணம கச்சாமி, சங்கம் சரணம் கசசாமி, தாமம் சரணம் கச்சாமி என எப்பொழுதும் ஜபிப்பார்கள். இவர்களின மதநூல்கள் மூன்று. விநயபிடகம், சுத்தபிடகம, அபிதம்மபிடகம் என்பன. இவைகளுக்குத் ''தரிபிடகம்'' என்ற கூட்டுப் பெயர். சுதத பிடகத்தில் உள்ள ''தம்மபிடகம்'' ஒன்றுதான இந்தியாவில உள்ளது. இது இந்து பகவத் கீதைககு ஒபபானது. மேலும் ''ஸத'' என்றால் அழிவற்றது. ''அஸத'' என்றால அழிவுள்ளது என்று பொருள். இவவுலகம் நம் கண்ணிற்கும் தெரிகிறது. ஆனாலும அழிநது அழிந்தும் தோன்றுகிறது. அதனால் இநத உலகத்தை ''ஸத்—அஸத்'' என வேண்டும். எது ஸத்தும், அஸத்தும் இலலையோ. அது நிஸ்ஸத்வம் அதாவது 'சூன்யம' என்றனர். இந்தப் பூதஉடல, பூமி, நீா, நெருப்பு, காற்று, வானம் என்ற பாஞ்ச பௌதிக தாதுக்களுடன்அறிவு என்ற மற்றொரு தாதுப்பொருளும் சேர்நது, உண்டாகிறது. இந்த விஞான தாதுதான ஆத்மாவாகும. இந்த விக்ஞான தாது அவித்யை என்பதுடன் ஆசை, வெறுப்பு முதலியவைகளை உண்டுபண்ணும். இதுதான் மனிதனுடைய பிறப்பு இறப்புக்குக் காரணம். இந்த அறியாமையை அறவே நீககி, எல்லாம் நொடியில் தோன்றிமறையும் தனமையான 'க்ஷணிகம்' என்பதை உணாந்து எல்லாம் துன்பமயம், என்ற பாவனையுடன் ஸுக எணணத்தை எல்லாம் அழித்து மேலே வானில் மெதுவாகக் கிளம்பி ''ஸர்வம் சூன்யம்'' என்ற உணர்வால் நிர்வாணமாகிய மோக்ஷத்தை அடைய வேண்டும். ''நிர்விண்ணஸ்ய நிர்வாணம்'' என்பது இவாகளின் அசைக்க ஒண்ணுக் கொள்கையாகும்.

**பாசுபதம் என்ற மதத்தின் சிறு விளக்கம் கூறுக?**

இவர்கள் பசுபதி மதத்தைச் சார்ந்தவர்கள். பரமாணுதான் உலகப்படைப்பின் உபாதான காரணம். மண் பானைக்கு மண் காரணமாவது போல். கடவுள், குயவன் பானைக்குப்போல், நிமித்த காரணம். பிறப்பு இறப்பு கர்மவினைக்கு உட்பட்டது. இது அநாதி. கர்மானுஷ்டானத்தால் பசுபதியை அடைவது மோக்ஷம். இவர்களின் கொள்கையில்,

'' ருத்ராக்ஷகங்கணம் ஹஸ்தே, ஜடாசை காச மஸ்தகே|
கபாலம் பஸ்மநாஸனம் த்யானம் ப்ரணவபூர்வகம்||
தீக்ஷாபரவே சமாத்ரேண ப்ராம்மணோபவதி க்ஷணாத்||

என்றபடி கையில் ருத்ராக்ஷவளையம் போட்டுக் கொணடு தலையில் திரு ஒடு ஏந்தி விபூதியினால் வெண்ணீராடி, ப்ரணவத்துடன் பசுபதி மநதிரத்தை த்யானம் செய்வது போன்ற தீக்ஷை எடுத்தவர் பிரம்ம வித்தாகிறான் என்பது. இவர்களின் கொள்கைப்படிககு ஜீவாத்மா பல, நித்யம், அணுவடிவம் என்பது.

**மீமாம்ஸை என்றால் என்ன? விளக்கக் குறிப்பு என்ன?**

நான்கு வேதங்கள், சிக்ஷை, வியாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜோதிஷம், கல்கம் என ஆறு அங்கங்கள், மீமாம்ஸை, நியாயம், புராணம், தர்மசாஸ்திரம் என்பன நான்கு ஆக 14 வித்யைகள். இப்பதினான்கில் ஒன்றுதான் ''மீமாம்ஸை'' என்பது. வேத வாக்கியஙகளில் பல ஒன்றுக்கொன்று கருத்தில் முரண்படுவதுபோல் இருக்கும். மற்றும் அறத்துக்கு விளக்கம் காண்கையில் தர்மசங்கடமான சிக்கல் உள்ள இடம் இருக்கும். சந்தாப்பம அதாவது பிரகரணம் இதற்குத் தக்கப்படிக் கூட்டிக் கழித்து ''வாக்யைக வாக்யதை'' செய்யவேண்டி வரும். வைதிக சப்தங்களின் பொருளை உண்மையான பொருளில் உறுதிப்படுத்தவேண்டி இருக்கும். மறறும் தங்கள் கொள்கையை மையமாகக்கொண்டு சாத்திர நியாயங்கள் கூறவேண்டி இருக்கும். புண்ணியம், பாபம், சுவர்க்கம முதலியவை பற்றி பொருள்முடிவு எடுக்கவேண்டி இருக்கும். இத்தகைய இடங்களில் பொதுவாக வேதத்தின் பெருமை, தனமை இவைகளைப் பாதுகாக்கவேணடிய வகையிலும மற்றும் பல விளககங்களுக்கும் தேவைப்படும் சாஸ்திரமே மீமாமஸையாகும. வேதாந்த விசாரம் செய்ய மீமாம்ஸை, தர்க்கம் என்ற இரு சாஸ்திரங்கள் மிகவும் கை கொடுக்கும. மீமாம்ஸை என்ற சொல்லுக்கே வேதவாககியங்களின் பிரமாணத்தை நிலைபடுத்தும் எண்ணமுள்ளது எனப்பொருள். இதனை ப்ரவர்த்திப்பித்து சூத்திரம எழுதியவர் ஜைமினி முனி

(திருப்புக)

# ★ பாகவத உதயம் ★

திரு. எம. கே. ஸ்ரீநிவாசன, பி.ஏ.,
சென்னை—39

வியாச மகரிஷி நர்மதா நதி தீரத்தில் ஒரு நாள் காலையில் அனுஷ்டானங்களை முடித்துக்கொண்டு ஆசனத்தில் வந்து அமர்ந்தார்.

'நாராயணா' என்ற கானம வான வீதியில் கேட்டது அண்ணாந்து பார்த்தார். அடுத்த நிமிஷம் திரிலோக சஞ்சாரியான நாரத மகரிஷி வீணையை மீட்டிக கொண்டு வநது இறங்கினார்.

நாரதரை உபசரித்து ஆசனம் அளிததார் வியாசர். இருவரும் சிறிது நேரம் சம்பாஷித்துக் கொண்டிருந்தனா. அப்பொழுது நாரதா சநதிரனில் களங்கம் இருப்பது போல, தேஜசுடைய உமது முகத்தில் கவலை ஏற்படக் காரணம் எனன?'' என்று கேட்டார்.

'நாரத மகரிஷே! வேதங்களையெல்லாம் வகுத்துக கொடுத்தேன். பிரம்ம சூததிரம் செய்தேன். பல புராணஙகளை வழங்கினேன். ஆனாலும என மனம் நிம்மதி அடையவில்லை. சாந்தி பெறவிலலை' என்றார் வியாசர்.

'மகரிஷே! நீர் யாராலும் செய்ய முடியாத சிறந்த காரியங்களைச் செய்தீர். ஆனாலும் பக்தியை வளர்க்கும் பகவானுடைய கல்யாண குணங்களையும், சரித்திரஙகளையும் நீர் பாடவில்லை. இதனால்தான் உமக்கு ஆத்ம சமாதானம் ஏற்படவில்லை. ஆகையால் பாகவதத்தை பாடும்' என்று சொல்லிவிட்டு நாரதா விடைபெற்றுச் சென்றார்.

உலக உபகாரமாகப் பல நூல்களை படைத்த வியாசர் பாகவத்தையும் செய்ய வேண்டுமெனற பகவானுடைய சங்கல்பத்தால வியாசருக்கு ஆத்ம சமாதானம் வராமல் இருந்தது.

இனனொரு வழியாகப் பார்த்தால் அறிவு தெளிநது அறிவு நூல்களைச் செய்த வியாசர் அன்பு பெருகி அனபு நூல்களையும அவர் செய்ய, நாரதர் வழி வகுத்தார். அறிவின் தெளிவினாலே, மூளையின் வளர்சசியினாலே எவ்வளவு வியக்கததக்க வேலைகளைச் செய்து விட்டாலும் கூட ஆத்ம சமாதானம் உண்டாகாது. அன்பு வளர வேண்டும். அபபொழுது தான் சமாதானம் உண்டாகும் என்று இதில் தெளிவாகிறது.

பறவை இறக்கைகளினால்தான் பறக்கிறது. அதுவும் இரண்டே இறக்கைகள் தான.

நமக்கு அறிவு, அனபு இரண்டும் இறகுகள். அறிவுக்கு இருப்பிடம் மூளை. அன்புக்கு இருப்பிடம் இருதயம். இரண்டும சமமாக வளர வேண்டும். அன்பில்லாமல் மூளை மட்டும் வளர்ந்தால் 'நான்' என்ற அகம்பாவம வளர்கிறது. பிறரை அலட்சியம் செய்கிறோம் பிறர் சுக துக்கத்தை உணர முடியாமல் கொடுமை வளர்கிறது.

அறிவில்லாமல் அன்பு மட்டும் வளர்ந்தால் மூட பக்தி வளர்கிறது. பிறா கட்சியை உணர முடியாமல் கொடுமையே வளர்கின்றது.

அறிவில்லாவிட்டால் தெளிவு இலலை. அன்பு இல்லாவிட்டால் சமாதானம இல்லை. இரண்டுமில்லாத வாழக்கை மிருக வாழக்கை தான இன்றைய உலகம் மூளை வளாசசியைத் தான் அதிகம் பெறுகிறது.

அன்பு வளர வேண்டும். இதனால் சகிப்புத் தன்மையும் வளரும். நாம் வாழவதோடு பிறரும் வாழ வேணடுமென்ற விசால நோக்கம வளர வேணடும். அப்பொழுதுதான் உலகத்திலும் நம மனதிலும் சமாதானம் உண்டாகும்.

உலகத்தில் இந்த உணர்சசியைப பெருககவேதான் அநேக அறிவு நூல்களைச் சிருஷ்டிதத வியாச மகரிஷி அன்பு நிறைந்துள்ள பாகவதத்தையும் இயற்றினார்.

★

---

வர். இவா 12 அல்லது 16 அத்தியாயங்களகொண்ட பூாவ மீமாமசை சூத்திரஙகள எழுதினார். இவைகளுக்கு சபரர் என்பவர் பாஷ்யததையும் குமரிள பட்டர் என்பவர் வாாத்திகமும் எழுதினார். வேத வாக்கியங்களின் சிக்கலைக் களையும் சாததிரமே இது. அதனால் இதற்கு ''வாக்கியம்'' எனவும் பெயர். இவர்கள் பட்டர் எனவும் ப்ராபாகாரர் எனவும் இருவகைபபடுவர். இவர்களின் பொதுக் கொள்கையாவது ''பரபிரம்மம்'' என்பது ஒன்றும் இல்லை. அழிவற்ற ஜீவாத்மாக்கள் அநந்தம். ஜீவாத்மாக்கள் விபுக்கள் அதாவது எஙகும் நிறைந்தவர்கள. உடல் தோறும் தனித்தனி ஜீவாத்மா இருக்கிறான். வைதிக கர்மங்களிலும், யாகம் ஹோமம் முதலியவைகளிலே தான் இவர்களுக்கு முக்கிய நோக்கு. அதனால் இவர்களைக் ''கர்மடர்கள்'' எனவும் கூறுவதுண்டு. புண்ணிய பாபஙகளின் பயனாகவே மனிதன் இன்ப துனபம் நுகர்கிறான். யாகம் முதலிய வேதம் ஆணையிட்ட செயலைச் சரிவரச் செய்தால் சுவர்க்கம் அடையலாம். மோக்ஷத்தையும் பெறலாம.

(தொடரும்)

# ★ கீதை காட்டும் நல்வழி ★

திரு. டி. கே. நாராயணன்,
M S c., M Phil.,
ஆசிரியர் "சமயஜோதி" மதுரை.

## புருஷோத்தம யோகம்

**அத்தியாயம்—15.**

**பகுதி—4.**

எலலாவிதமான ஆசைகளை அடக கிய பினனா ஒருவன பிரமம ஞானத்தை அடைவதறகாக இடை யறுது முயல வேண்டும தானே தனியனுய் இமமுயற்சியில ஈடு படாது அவன் ஒரு குருவின துணையை நாட வேணடும. சதகுரு ஒருவன சாதகனுக்கு நல வழியைக காட்டுவார். ஆண வத்தை இலலாதாககி மனம் புலன களை ஒடுககி அனைததையும இறைவ னுககு அாபபணம் செயதுவிடுமாறு அவா சிஷயனைப பயிறறுவிப்பாா. இறைவனிடம சரண புகுநத பின்னா பகதனது தனிவியகதி போயவிடுகி றது. அவனை இயககுவது அநதப பரமபொருளே என்ற உணர்வில அவன லயிதது விடுகிறுன.

எததகையவா அநதப பெரு நிலையை அடைய முடியும? அல்லது பெறறகரிய பெருநிலையை அடைவ தறகு ஒருவரிடம என்னெனன தகு திகளா இருகக வேணடும? இதற கான பதிலை பகவான் அடுதத சுலோ கததில தருகிறுர் :

நிர்மானமோஹா ஜிதஸஙக தோஷா
அத்யாத்மநீதயா விநிவிருத்த
காமா: |
த்வந்த்வைர்விமுகதா' ஸுகதுக்க
ஸமஞைா
கச்சநத்யமூடா. பதமவயயம தத்'॥
(15-5)

''ஆணவமும அவிவேகமும் அற்ற வர், பறறு என்னும குற்றம் வென்ற வா, பரமாதம ஞான நிஷடர் ஆசை யற்றவர், இனப துன்பம என்னும இருமைகளை கடந்தவர், மயக்க மொழிநதவா — இத்தகையவர்கள அநத அழியா நிலையை அடைகினற னர்''.

கலெகடர் ஆவதறகு ஒருவருககு ஆசை இருக்கலாம. ஆனுல் வெறும ஆசை மட்டும் இருநதால் போதாது. ஐ.ஏ எஸ தோவு பெற் றிருகக வேணடும அதுபோல டாகடா ஆக ஒருவன் விருமபினுல எம பி. பி. எஸ், எம. டி, போன்ற படடஙகளைப பெறறிருக்க வேண டும. ஆசை வேறு தகுதி வேறு. தகுதிகளைப் பெற்றுககொணடு ஆசைபபட்டாலதான் ஆசைபபடு வது கிட்ட வாயப்பு உண்டு. இதைத்தான குருதேவா சிவானந தர், 'Deserve first and then desire', என்கிறுா

'இறைவா, எத்தனை காலம நான இநத சமசாா சாகரததில கிடநது உழல வேணடும. உன பொன்னடி யில் எனனைச சோத்துககொள்ள மாட்டாயா? போதும் இநதப் பிறப் பிறப்பு; இனிப பிறவா நிலையை அருளமாடடாயா?'' என்று பக்தா ஒருவர் இறைவனைக் குறித்து வேண டலாம், பெறறகரிய பெருநிலையை அடைவதற்கான வேட்கை அவரி டம இருககலாம். ஆனுல வெறும் நாட்டம் மட்டும இருநதால் போதாது, அநதப பெருநிலையை அடைவதறகான தகுதிகளும அவரி டம் இருத்தல வேண்டும. அந்தத் தகுதிகள் எனனென்ன எனபதைப் பகவான் இந்த சுலோகத்தில தொகுதது அளிககிறுா.

இது இநத அத்யாயததில் உள்ள ஒரு முககியமான சுலோகம ஆகும. எல்லோரும சாதனையைத் தொடஙகி விடலாம். இதற்கு விருப பமும் சிறிது முயற்சியும் இருந்தால் போதும. தொடஙகுவது எளிது. ஆனுல தொடங்கிய சாதனையை உறு தியாகத் தொடர்வது கடினம். இடையில் எததனையோ இடுககண கள எதிாப்படலாம். மேடு பள்ளங கள் இருககலாம. நமது மனமே நம் மைப பலவிதஙகளில் ஏமாறறிக் குழியில தள்ளப் பாாக்கும் மிக வும கவனமாக இருத்தல் வேணடும.

**तत अव्यय गच्छन्ति**'—'அநத அழியாப் பெருநிலையை அடைகின்றனர். யார்? எவர்களிடம கீழ்ககாணும குணஙகள் காணப்படுகின்றனவோ அவர்கள அநதப் பிரம்ம நிர்வாணப பெருநிலையை அடைகினறனர்.

**निर्मानमोहा:**—(நிர்மான மோஹா.)- மானமும் மோகமும அறறவா. மானம, மோஹம் எவரை விடடு ஓடிவிடடனவோ அவர்களே 'நிா மானமோஹர்கள்' ஆவாாகள. தான அல்லாததைத் தான எனக கரு துதல் அபிமானம் ஆகும். இதைக கர்வம அலலது ஆணவம எனறும கூறலாம. 'நான எவ்வளவு படிதத வன, பட்டம பெறறவன், அழகான வன், பணம படைத்தவன், வசதிகள வாயககப் பெறறவன, பதவி வகிப்ப வன, உயா குலததில பிறந்த வன .. ' இப்படி தன்னைப பற்றி கர்வபபடுவது அபிமானமாகும்

கண்ணுடியில தன் உருவத்தைக கண்டு பெருமைபபடாதவா உணடோ? தோலின நிறம கறுப பாயிருநதாலும சுருடடை முடி யைக் கணடு மகிழதல், மாறுகணணு யிருநதாலும் சிவப்பு நிறததைக கண்டு பெருமைப்படுதல, . இப்படி ஏதாவது ஒரு அம்சத்தைக கணடு அதனுல் கர்வமும் பெருமையும கொள்ளுதல் மனித இயலபாகும. தேசம, காலம, வஸ்து-இவறறின் பிடியில் உட்படாதவரே பெருமக்

கள். 'நான் இந்த ஊரைச சோந்த வன், இநத இனத்தில் பிறநதவன, இத்தனை காலம் அங்கு வசித்த வன .. ' எனறு எவர்கள சொல லிப் பெருமைப்படுவதில்லையோ அவாகள சானறோா

அபிமானமும மோஹமும ஒன்றோ டொனறு பினனிப பிணைநதவை. அதனுல்தான் பகவான இரணடையும சோதததே சொலகிறா. இல லாத ஒன்றை இருபபதாகக் கருது வது மோஹம அலலது மயககம. ஒன்றுமே செயயாமல் உலகத்தையே நாமதான் தாஙகுவதாக நமமில் பலா எண்ணுகிறோமில்லையா? ஒன றுமே தெரியாமல அனைததையும அறிநததாக நம்மில் பலர் உளறுகிறோமிலலையா? இதுதான ஆணவத தின விளைவாகத தோனறும மோஹம. அறிஞர் பெருமககள, ஞானிகள் இததகைய ஆணவ, மோகஙகளிலிருநது விடுபட்டவா கள்.

'ஜிதஸஙக தோஷா '—பறறு என்னும குறறம வெனறவர். நமது அனைத்துத் துன்பஙகளும உலகப பொருள்களை நாம பறறி நிறபதால ஏறபடுபவையாகும். பொறி புலன கள சதா நமமை ஏமாறறக் காத்திருககினறன. 'ஸஙகாத ஸஞ் ஜாயதேகாம'...பரணசயதி' எனற சுலோகஙகளில் ஏறகனவே பகவான முன்பு ஒரு அத்யாயததில் குறிப்பிட்டது போனறு பற்றுதலினுலதான் ஒரு பொருளிடம அலலது ஒரு நபரிடம நமககு ஆசை ஏறபடுகிறது. பிறகு அது சினம, மோகம, புததி தடுமாறறம என்று இறுதியில அழிவில கொண்டுபோய நமமைச சேர்க்கிறது. எனவே அழிவில்லாப் பெரு நிலையை அடைய வேண்டுமானுல் உலகப பொருளகள எதனிடத்தும பற்றுககொள்ளக கூடாது. அபபடியானுல் பறறு இல்லாது உலகில நம மால் வாழ முடியுமா எனற கேள்வி கூடவே எழுகிறது. முடியும. எப படி? தாமரை இலைத தண்ணீர் போல. உலகில வாழும்போது, 'இவை எலலாம இறைவனுடையவை எனனுடையது ஒன்றும் அலல', எனற எணணததில் ஊறி ஒனறுடனும பற்று அறறு வாழ நாம முயல வேணடும அப்படி வாழ்நதால இபபிறவியின் இறுதியில் வெள்ளரிக கொடியினின்று வெள்ளரிப பழம மிக எளிதிலே விடுபடுவது போன்று பிறவித தளையினின்று விடுபட்டு இறைவன் அடியை அடையலாம.

'अध्यात्मनित्या ' (அதயாதமநிதயா.) —பரமாதம ஞான நிஷ்டா இஙகு 'அத்யாத்ம' என்பது பரமாதமனின சொரூபததைக குறிக்கிறது. நீரின்றி மீனுக்கு எவவாறு வாழவு கிடையாதோ, கணவனின்றி பதிவிரதா ஸதிரீககு எவவாறு மகிழசசி கிடையாதோ, அதுபோல இறைவனின் நினைவின்றி பகதனுககு வாழவு கிடையாது. நினறாலும, கிடநதாலும, இருநதாலும, எழுந்தாலும் எந்த நிலையிலும சதா அவன இறைவனுடனேயே ஐககியபபடடிருபபான்.

' ஊனின மேய ஆவி நீ உறககமொடுணர்சசி நீ
ஆனில் மேய ஐநதும நீ, அவற்றுள நினற தூயமை நீ
வானினேடு மண்ணும நீ, வளஙகடற பயனும நீ.
யானுமநீ ய தனறியெம்பி ரானும நீயி ராமனே ' ।

எனறு திருமழிசையாழவாா கூறுவ தறகொபப பகதன தனனைப் பகவானேடு ஐக்கியபபடுததிககொணடு விடுவான.

'தலையே நீ வணஙகாய, மூககே நீ முரலாய, செவிகாள கேணமின் களோ..... எனறு அமைகினற தேவாரப பாடல இநதக கருத்தைத தான வலியுறுத்துகின்றது. 'இருந தால் அவன் நினைவில, இறந்தாலும் அவன நினைவில்' எனபதுதான் ஞானியரின நிலை.

**विनिवृत्त कामा:**—(வினிவிருதத காமா:)—ஆசை அறறவாகள எவாகள மனம இறைவனிடம் லயித்து நிறகிறதோ அவர்களை ஆசைகள அணடமாடடா.

**जहाँ राम है वहाँ काम नहीं, जहाँ काम है वहाँ राम नहीं**—'எஙகே ராமன உண்டோ அஙகே காமம் இலலை, எங்கே காமம உணடோ அங்கே ராமன இல்லை' எனபது பொருள் பொதிந்த தொருவாககியம. பொதுவாக காலியான மனத்தில தான ஆசைகள அலைமோதும. An idle mind is the workshop of a devil—'சோமபேறியின மனம் சாததானின உறைவிடம' எனபபடுவதால இறைச சிநதனையால மனததைச சதா நிரப்பி வைததிருநதால ஆசையெனும பூதம அஙகு அணடாது.

**क+आम=काम । 'क'**வுககு 'ஸுகம' எனறும, **'आम'**கு 'மடடமான' என றும பொருள. எனவே குணததில் உயாநத சானறோாகள மட்டமான இனபததை நாடமாடடாாகள. இனபத்தின இருப்பிடமும, பிறப்பிடமும இறைவனே. எனவே ராம நாம ரசததை அனுபவிககும பகதாகள, ஞானியாகள மற்ற ஆசைகளுககு அவாகள மனததில இடம கொடுககமாட்டார்கள அததகையவாகளே மேலான பிரமமானநதப பெருநிலையை அடையத தகுதியான வர்கள ஆவா

**सुख दुःख संज्ञैः द्वन्द्वै विमुक्ता:**—'ஸுக துகக ஸமஞை' தவநதவைா விமுகதா —இனப துனபம போனற இரட்டைகளைக கடநதவாகள. 'எலலாம இறைவன் செயல' எனற நினைபபில ஊறியிருப்பவாகளுககு 'இது நலலது, அது கெடடது' எனற வேறுபாடே தெரியாது 'அனைத்தும் அவன செயலே' எனற எண ணத்தில அவாகள ஊறியிருபபாா கள். நிழலும வெயிலும், உஷ்ணமும குளிர்ச்சியும, இகழ்சசியும, புகழசசியும, லாபமும நஷ்டமும் எலலாம் அவாகளுககு ஒன்றுதான். விருபபு வெறுப்பு இல்லாத காரணத்தினுல அவாகள் பெறற்கரிய பெரு நிலையை அடைகினறனர்கள.

(தொடரும)

